17th August 1960]

SRI A. A. RASHEED : Is the Hon. Member aware that the price of ghee has gone up from Rs. 7 to Rs. 9 per viss? If so, is there any proposal to control the price of ghee?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The Government are aware that the price of ghee is rising since last month and there is no proposal to control the price. The prices are going to fall down in another two months.

*Crop Competitions*

* 237 *Q.*—SRI T. S. RAMASWAMI (On behalf of SRI S. M. ANNAMALAI) : *கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—*

*1960-ம் ஆண்டு ஏப்ரல் மீ 19உ-ல் நட்சத்திரக் குறியிட்டக் கேள்வி எண் 719-க்கு அளித்த பதிலையொட்டி அதிக உணவு உற்பத்தி செய்யும் கிராமங்களுக்குப் பரிசளிக்கும் விஷயமாக மாநில சர்க்காரும் மத்திய சர்க்காரும் வந்த முடிவென்ன?*

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The scheme for the award of Community Prizes was introduced during 1959–60 in this State. The continuance of the Scheme for the year 1960–61 has also been sanctioned.

SRI P. G. KARUTHIRUMAN: *ஸார், இந்த கிராப் காம்பெடிஷனிலே, நம் மாகாணத்திலே, எந்தெந்த ஜில்லாக் களுக்குப் பரிசுகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன, எந்தெந்த இனங் களில் வழங்கப்பட்டிருக்கிறது?*

THE HON. SRI M. BHAKTAVATSALAM: *1959–60-க்கு இரண்டுவிதமான பொதுப் பரிசுகள் வழங்கப் பட்டிருக்கின்றன. ஒன்று எந்த ஜில்லா சென்ற மூன்று ஆண்டுகளில், சராசரிக்கு அதிகமாக, அதாவது 15 பர்சென்ட்க்கு மேலாக, உற்பத்தி செய் திருக்கிறதோ, அதற்கு ரூ. 10,000 ரொக்கப் பரிசு. அதற்கு "ராஜ்ய கலாஷ்" என்று பெயர். அது கோயம்பத்தூருக்கும், தஞ்சாவூருக்கும், 1959–60-க்கு வழங்கப்படும். மற்றொன்று, எந்த ஜில்லா முன்பைவிட அதிகமாக உற்பத்தி செய்கிறதோ அதற்கு. அந்த பரிசுக்கு "ஆல் இந்தியா ராஷ்ட்ர கலாஷ்" என்று பெயர். அது ரூ. 50,000 பெருமானமுள்ளது. அது கோயமுத்தூருக்குக் கிடைக்கும்.*

SRI V. K. KOTHANDARAMAN: *ஸார், நமது ராஜ்யத்திலே, தஞ்சை ஜில்லாவிற்கு அடுத்தபடியாக வடாற்காடு ஜில்லா தான் உணவு உற்பத்தி அதிகமாகச் செய்திருக்கிறது என்று அமைச்சரவர்களே சொல்லியிருக்கிறார்கள். ஆகவே, அந்த வட ஆற்காடு ஜில்லாவிற்கு ஒரு செகண்ட் பிரைஸாவது வழங்க ஏதாவது செய்யப்படுமா?*

THE HON. SRI M. BHAKTAVATSALAM: *ஜில்லாவின் விஸ் தீர்ணம் அதிகமாக இருந்து உற்பத்தி செய்திருந்தால், அதற்குப் பரிசு கிடையாது; நெல்பயிர் அதிக உற்பத்தி, குறிப்பிட்ட நிலத்தில், செய்வதற்குத்தான் இந்த பரிசுகள்.*

[17th August 1960

Sri N. MARUDACHALAM: விவசாயிகள் என்ருல் பெரும் நிலச் சொந்தக்காரர்களா அல்லது சிறு நிலம் படைத்த விவசாயிகளா என்பதை அறிய விரும்புகிறேன்.

The Hon. Sri M. BHAKTAVATSALAM: நான் கொடுத்த விடையை கனம் அங்கத்தினர் கவனித்திருக்க வேண்டும். இந்தப் ப்ரைஸ் கம்யூனிட்டிக்குக் கொடுக்கப்படுகிற ப்ரைஸ். இந்தப் ப்ரைஸ் தனி நபருக்குக் கொடுக்கப்படுகிற ப்ரைஸ் அல்ல. ஜில்லாவிற்குக் கொடுக்கப்படுகிறது. ஜில்லாவிற்கு பத்தாயிரம், ஐம்பதாயிரம், என்று அந்தந்த டெவலப்மெண்ட் கவுன்சிலுக்கு அளிக்கப்படுகிறது. அதை பொதுவாக வைத்துக் கொண்டு செலவு செய்கிருர்கள்.

Sri V. K. KOTHANDARAMAN: ஒரு குறிப்பிட்ட இடத்தை வைத்துக்கொண்டு ப்ரைஸ் கொடுக்கப்படுகிறதா? சிலர் ப்ரைஸ் வாங்க வேண்டுமென்ற எண்ணத்தில் அதிகப்படியாக உரம் போட்டு விவசாயம் செய்கிருர்கள். அப்படிப்பட்டவர் களுக்குக் கொடுக்கப்படுகிறதா அல்லது பொதுவாக எல்லோருக்கும் கொடுக்கப்படுகிறதா? ஜில்லா அடிப்படையில் கொடுக்கப்படுகிறதா அல்லது தாலூகா அடிப்படையில் கொடுக்கப்படுகிறதா, எந்த அடிப்படையில் ப்ரைஸ் வழங்கப் படுகிறது என்பதை கனம் அமைச்சர் அவர்கள் சொல்லு வார்களா?

The Hon. Sri M. BHAKTAVATSALAM: தயவு செய்து நான் ஏற்கெனவே சொன்ன பதிலை கனம் அங்கத்தினர் கவனித்திருக்க வேண்டும். நான் குறிப்பிட்டது, பொதுவாக யாராவது அதிக மாக விளைச்சல் செய்து காண்பித்தால் அவருக்குக் கொடுப்பது இல்லை. ஜில்லாவை எடுத்துக்கொண்டு அந்த ஜில்லாவில் அதிகப்படியாக விளைச்சல் காண்பித்தால் அந்த ஜில்லாவுக்குத் தான் ப்ரைஸ் கொடுக்கப்படுகிறது.

*Orphanages.*

*238 *Q.*—Sri P. G. MANICKAM: கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) இம் மாநிலத்திலிருக்கும் ஆலய நிதியிலிருந்து நடத் தப்படும் அனுதை குழந்தைகள் பராமரிப்பு இல்லங்கள் ஒவ் வொன்றிலும் 1960-ம் வருஷத்தில் எத்தனை அனுதை குழந்தைகள் இருக்கிருர்கள் ?

(ஆ) அவர்களுள் ஹரிஜன அனுதைக் குழந்தைகள் எத்தனை பேர்?

The Hon. Sri M. BHAKTAVATSALAM: (அ) & (ஆ) A statement [a] is placed on the table of the House.

Sri P. G. MANICKAM: மேற்கண்ட எட்டு தேவாலயங் களின் அனுதைக் குழந்தைகள் இல்லங்களில் 277 அனுதைக் குழந்தைகள் இருப்பதாகவும் அதில் பத்து ஹரிஜன குழந்தைகள் மாத்திரம் இருப்பதாகவும் தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

---

a Printed as Appendix II on page 383 infra